

# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்

“ நமது உணர்ச்சிகள் சுழலாக மாறாமல், சுலபமாக நம்மை விட்டுப் போகுமானால் அதை நாம் பிரவாகம் என்று கூறுகிறோம். ஞானப் புரிதல் ஏற்பட்ட அனைவருக்கும், தோன்றிய உணர்ச்சிகள் அனைத்தும் சுழலை ஏற்படுத்தாமல் விரைவில் மறைந்து விடுகின்றன. பிரவாகத்தில் எந்த உணர்ச்சி வேண்டுமானாலும் தோன்றி மறையலாம். பிரவாகம் மட்டுமே நமக்கு முக்கியம். அது இன்பப் பிரவாகமாகத் தான் இருக்க வேண்டுமென்ற கட்டாயம் கிடையாது.

- ஸ்ரீ பகவத்



# ஸ்ரீ பகவத் பவனில் செப்டம்பர் & அக்டோபர் 2 நாள் ஞான முகாம்

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This Book Designed By:
**PRAKASH PRINTERS, SALEM**
Mobile : 9843786655


ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞான முகாம் வருகின்ற **செப்டம்பர் மற்றும் அக்டோபர் மாதங்களில்** சேலம், ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற உள்ளது.

இடம்: **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக் காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.), சேலம்-636106.

**செப்டம்பர்** ஞான முகாம் நாள்: 09.09.17 சனி முதல் 10.09.2017 ஞாயிறு வரை
**அக்டோபர்** ஞான முகாம் நாள்: 14.10.17 சனிக் முதல் 15.10.17 ஞாயிறு வரை

நேரம்: **சனிக்கிழமை காலை 8:00 மணி முதல் ஞாயிறு மதியம் 3:00 மணி வரை**

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள், வெள்ளிக்கிழமை மாலையே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக் கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

ஞானமுகாமில் கலந்து கொள்ள கட்டணம் எதுவும் இல்லை

**அனுமதி இலவசம்.**

**நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.**

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 70 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவிற்கு**

- கலந்து கொள்பவர்களின் பெயர், முழு முகவரி, செல் நெம்பர் ஆகியவற்றை செப்டம்பர் ஞான முகாமிற்கு **SepGnanamuhaam** / அக்டோபர் ஞான முகாமிற்கு **Oct Gnanamuhaam** எனவும் **Type** செய்து **SMS** அனுப்ப வேண்டிய **எண்: 99422 19065**
- முன் பதிவிற்கு இறுதி நாள் 20-08-2017 / 20-09-2017



# இன்பப் பிரவாகம்

– ஸ்ரீ பகவத்



நாம் நமது வலதுகையின் மேற் பகுதியில் இடது கையைக் கொண்டு இலேசாகச் சொரிந்து கொள்வதாக வைத்துக் கொள்வோம்.

நமக்கு என்ன விதமான அனுபவம் ஏற்படும்?

சொரியும் போது, சொரிந்து கொண்டிருக்கிறோம் என்ற உணர்வு மட்டும் ஏற்படும். சொரிந்து முடித்ததும் சொரிந்து கொண்ட அந்த உணர்ச்சியும் மறைந்து விடும்.

அப்படி நாம் சொரிந்து கொண்ட இடத்தில் சிரங்கு இருப்பதாக வைத்துக் கொள்வோம். அந் நிலையில் நாம் அப்படிச் சொரியும் போது நமக்கு என்ன ஏற்படும்?

சொரிந்து கொள்ளும் இடத்தில் ஒரு வித இன்பமான உணர்ச்சி ஏற்படும். மேலும் சொரிய வேண்டும் என்ற தூண்டுதலும் ஏற்படும்.

சொரிந்து முடித்த பிறகு என்ன ஆகும்?

நாம் சொரிந்த இடமெல்லாம் எரிய ஆரம்பிக்கும்.

சிரங்கற்ற உடம்பில் சொரிவதற்கும், சிரங்குள்ள உடம்பில் சொரிவதற்கும் என்ன வேறுபாடு?

சிரங்குள்ள உடம்பில் இன்ப துன்ப அனுபவங்கள் உண்டு. சிரங்கற்ற உடம்பில் அது இல்லை.

"உங்களுக்கு சிரங்குள்ள உடம்பு வேண்டுமா? அல்லது சிரங்கற்ற உடம்பு வேண்டுமா?"

– இப்படி நம்மைக் கேட்பதாக வைத்துக் கொள்வோம்.

நாம் எதனை வேண்டுவோம்?

சிரங்குள்ள உடம்பில் தான் இன்பம் ஏற்படுகிறது என்று கருதி அதனை நாம் வேண்டுவோமா?

எவரும் அதனை வேண்டிட மாட்டோம். சிரங்கு என்பது ஒரு நோய்.

அதில் ஏற்படும் இன்பத்தையும் துன்பத்தையும் பிரிக்க முடியாது.

அனைவரும் ஆரோக்கியமான நிலையையே விரும்புகின்றோம்.

ஆனால் அந்த ஆரோக்கியமான உடலில் இத்தகைய இன்பம் ஏற்படாது.

அதே போல் துன்பமும் ஏற்படாது.

அந்த ஆரோக்கிய நிலை என்பது என்ன?

"மடாலயத்தின் மிகச் சிறந்த பானம்" என்னும் ஜென் கதையைக் கேள்விப்பட்டிருக்கலாம்.

புகழ் பெற்ற அந்த ஜென் மடாலயத்தில் சேர்ந்திடுவதற்காக இளைஞர்கள் இருவர் வந்திருந்தனர்.

மடாலயத்தின் குரு அவர்களை வரவேற்று உபசரித்தார். அவர்களிடம், "என்ன அருந்துகிறீர்கள்? மடாலயத்தின் சிறந்த பானத்தை அருந்துகிறீர்களா அல்லது வேறு ஏதாவது பழச் சாறு வேண்டுமா?" என்று கேட்டார்.

''மடாலயத்தின் சிறந்தபானம்'' மிகவும் விசேடமான சுவையோடு இருக்கலாம் என அந்த இளைஞர்கள் கருதினர். எல்லா பழச் சாறுகளையும் அருந்திய அனுபவம் அவர்களுக்கு இருந்தது. ஆனால் மடாலயத்தின் சிறந்த பானத்தை அவர்கள் இது வரை சுவைத்துப் பார்த்ததில்லை. அதையும் சுவைத்துப் பார்த்து விடுவோம் என முடிவு செய்து அதையே அளிக்குமாறு வேண்டினர்.

மடாலயத்தின் சிறந்த பானத்தை அவர்களுக்கு வழங்குமாறு குருவும் உத்தரவிட்டார்.

மடாலயத்தின் சீடர்கள், அந்த இளைஞர்களுக்கு ஆளுக்கொரு தம்ளரில் சாதாரண குடி தண்ணீரை மட்டும் வழங்கனார்கள்.

மடாலயத்தின் சிறந்த பானம் என்ற பெயரில் அந்த குரு அவர்களை வெறும் தண்ணீரை மட்டும் வழங்கி ஏமாற்றிவிட்டார்.

மறுநாள் காலையிலும் குரு கேட்டார். "இன்று

என்ன அருந்துகிறீர்கள்? ஏதாவது பழச்சாறுகள் வேண்டுமா? அல்லது மடாலயத்தின் சிறந்த பானம் வேண்டுமா?”

இன்று அந்த இளைஞர்கள் சுதாகரித்துக் கொண்டார்கள். ஆரஞ்சு, ஆப்பிள் என ஆளுக்கொரு பழச்சாறு வேண்டினார்கள். அவர்கள் கேட்ட பழச்சாறுகள் அவர்களுக்கு வழங்கப்பட்டன. குருவின் வார்த்தைகளில் சிக்கி ஏமாறவில்லை என்ற நிம்மதியுடன் இருந்தார்கள்.

அன்று முழுவதும் அவர்கள் விரும்பிய பழச்சாறுகளே அவர்களுக்கு வழங்கப்பட்டன.

மறுநாளும் அவர்களுக்கு பழச்சாறு வழங்கப்பட்டன.

தொடர்ந்து தினமும் அவர்கள் குடிப்பதற்கு பழச்சாறு வழங்கப்பட்டது. ஆனால் அவர்கள் சந்தித்த புதிய பிரச்சினை என்னவென்றால் குடி தண்ணீர் வழங்குவது அவர்களுக்கு அறவே நிறுத்தப்பட்டு விட்டது. எப்போது தாகம் ஏற்பட்டாலும் அவர்களுக்குத் தண்ணீர் கொடுக்கப் படவில்லை. பழச் சாறுதான் வழங்கப்பட்டது.

இந்த நிலைதான் ஒரு வாரத்துக்கு நீடித்தது. ஒரு வாரமாக அவர்களுக்கு குடி தண்ணீர் வழங்கப்படாததால் அவர்களுக்கு ஒரு வகையான தாக உணர்வு நீடித்துக் கொண்டே இருந்தது.

ஒரு வாரத்துக்குப் பிறகு அந்த ஜென் குரு மீண்டும் கேட்டார்.

“உங்களுக்குப் பழச் சாறு பிடித்திருக்கிறதா? இதுவே உங்களுக்குப் போதுமா? அல்லது மடாலயத்தின் சிறந்த பானமும் உங்களுக்கு வேண்டுமா?”

அவர் இவ்வாறு கேட்டதும் இளைஞர்கள் இருவரும் ஒருமித்த குரலில் கூறினார்கள்.

“மடாலயத்தின் சிறந்த பானமே எங்களுக்குப் போதும் சுவாமி! பழச்சாறு எங்களுக்கு வேண்டவே வேண்டாம்!”

தண்ணீர் சுவையானதா அல்லது பழச்சாறுகள் சுவையானதா?

தண்ணீரை விடவும் பழச்சாறுதான் சுவையானது. அதில் எந்தச் சந்தேகமும் கிடையாது.

சுவைக்காகவோ அல்லது ஒரு மாற்றுச் சுவைக்காகவோ பழச்சாற்றை அருந்தலாம். ஆனால் தண்ணீருக்கு மாற்றாக அதனை நம் அருந்த முடியாது.

“தண்ணீரில் அப்படி என்ன விசேடத் தன்மை இருக்கிறது?” என்று ஒருவர் நம்மிடம் கேட்டால் நாம் எப்படி பதில் கூறுவது?

“அதைப் போன்ற சுவையுடையதாக இருக்கும், இதைப் போன்ற சுவையுடையதாக இருக்கும். அதன் சுவையை விவரிக்கவே முடியாது. அது அத்தகைய சுவையுடையது. அதை ஒருமுறை பருகிவிட்டால் மீண்டும் மீண்டும் பருகாமலிருக்க முடியாது. வாழ்நாள் முழுவதும் பருகினாலும் அது திகட்டாது,'' என்று கூறமுடியுமா?

“அதன் சுவையை விவரிக்க முடியாது. வாழ்நாள் முழுக்கப் பருகினாலும் திகட்டாது'' என்ற கூற்று வேண்டுமானாலும் உண்மையாக இருக்கலாம்.

ஆனால் அது அடுத்தவர் புரிந்து கொள்ளக்கூடிய விளக்கமாக இருக்காது.

நம்முடைய உடலின் ஆரோக்கிய நிலையையும், மனதின் ஆரோக்கிய நிலையையும் விவரிப்போமாயின்

அது இத்தகைய விளக்கமாகத்தான் இருக்கும்

பிரவாகம் என்று நாம் விவரிக்கும் பிரவாக நிலையும் இதுதான். அதுவும் இப்படித்தான் உள்ளது.

“பிரவாக நிலை சூப்பராக உள்ளது” என்று ஒருவர் கூறுகிறார்.

''பிரவாக நிலை ஓர் உப்புச்சப்பற்ற நிலையாகவல்லா உள்ளது'' என இப்படி ஒருவர் கூறுகிறார்.

பிரவாகநிலையின் தன்மை தான் என்ன?

உண்மையில் அது ஒரு நிலையே அல்ல.

பயம் என்பது ஒரு நிலை. வருத்தம் என்பது ஒரு நிலை. இது போல் மகிழ்ச்சி, கோபம் என்னும் உணர்ச்சி வெளிப்பாடுகள் அனைத்தையுமே “நிலை” என்ற பொருளில் எடுத்துக் கொள்ளலாம்.

பயம் என்றால் என்ன என்பதை விவரிக்கலாம்; கோபம் என்றால் என்ன என்பதை விவரிக்கலாம். ஆனால் அதைப் போல் பிரவாகம் என்றால் என்ன என்பதை விவரிக்க முடியாது.

உண்மையில் பிரவாகம் என ஒரு நிலையே கூட கிடையாது. நாம் விளங்கிக் கொள்ளும் வசதிக்காக பிரவாகம் என்ற ஒரு வார்த்தையைப் பயன்படுத்துகிறோம்.

நமது கருத்துகளையே அறியாத ஒருவர் பிரவாகம் என்று பொதுவாக கூறுவாரேயானால்

என்ன பொருளில் அதனைக் கூறுவார்?

நீர் நிலைகளில் தண்ணீர் பொங்கிப் பாய்ந்தோடுவதை நாம் பிரவாகம் என்று கூறுவோம்.

நீர்ப் பெருக்கு நிற்காமல் ஓடிக் கொண்டிருப்பதைப் பிரவாகம் என்று கூறுவோம்.

ஓரிடத்தில் பொங்கி உற்பத்தியான தண்ணீர் எவ்விதத் தடங்களும் இல்லாமல் சீராக நகர்ந்து ஓடிக் கொண்டே இருப்பதைப் பிரவாகம் என்று கூறுகிறோம்.

நாம் கூறும் பிரவாக நிலையும், நீர்ப் பெருக்காக இருக்கும் பிரவாகமும் ஒன்றுதானா?

மின்னல் ஒன்று “பளீர்” என வெட்டி மறைகிறது என வைத்துக் கொள்வோம். இதனைப் பிரவாகம் என்று கூற முடியுமா?

இப்படிப் பளிச்சிட்டு மறைந்துவிடும் ஒன்றைப் பிரவாகம் என்று கூற முடியாது.

ஆனால் “பிரவாக நிலை” என்று நாம் விவரிப்பது உண்மையில் இத்தகைய ஒரு நிலையையே ஆகும்.

–பளிச்சிட்டு மறையும் ஒரு நிலையையே ஆகும்.

அதுபோல் நமது அனுபவங்களும் மின்னலைப் போல் தோன்றி மறையும் தன்மையோடு தாம் உள்ளன.

ஒவ்வொரு மன அனுபவமும், தோன்றிய உடனேயே மறைந்து விடுகிறது. அது மறையும் போது தான் அது வந்ததையே நாம் அறிகிறோம்.

மின்னல் என்பது எப்போதோ ஒன்று ஏற்படுவது. ஆனால் மன அனுபவங்கள் – உணர்ச்சிகள் அப்படியன்று.

அவை அடுக்கடுக்காக வந்து கொண்டே இருக்கின்றன. அலை அலையாக ஏற்பட்டுக் கொண்டிருக்கின்றன.

அந்த அனுபவங்களே ஒரு சுழலைப் போன்று நம் மனதினுள் சுழல ஆரம்பிக்கும் போது, நாம் அதனுடைய கோரப் பிடிக்குள் மாட்டிக் கொண்டு விடுகிறோம்.

நமது உணர்ச்சிகள் இவ்வாறு சுழலாக மாறாமல், சுலபமாக நம்மை விட்டுப் போகுமானால் அதை நாம் பிரவாகம் என்று கூறுகிறோம்.

நம் உணர்ச்சிகள் யாவும் இப்படிச் சுலபமாக மறைவதை நாம் பிரவாகம் என்று கூறுகிறோம்.

மொத்தத்தில்–

தோன்றியவையெல்லாம் மறைவதே பிரவாகம்.

தோன்றியவை நீடித்திருப்பின் அது பிரவாகமல்ல.

ஆனால் எந்த உணர்ச்சியுமே நீடித்திருப்பதில்லை. தோன்றிய உணர்ச்சியெல்லாம் மறைவதுதான் அதனுடைய இயற்கை – இயல்பு.

ஆகவே பிரவாகம் என்பது இயற்கையானது.

அது ஆற்றைப் போல் கணந்தோறும் புதியது. ஒரு அருவியைப் போல் கணந்தோறும் புதியது.

பிரவாகத்தில் என்ன தோன்றும்? என்ன மறையும்?

பிரவாகத்தில் ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் ஒவ்வொரு விதமன உணர்ச்சிகள் தாம் இடம் பெறும்.

மகிழ்ச்சியும் அமைதியும் மட்டுந்தான் பிரவாகத்தில் இடம் பெறும் என்று கூறி விட முடியுமா?

அங்கு எவை வேண்டுமானாலும் இடம் பெறலாம். மகிழ்ச்சி இடம் பெறலாம், கோபம் இடம் பெறலாம், அல்லது பயம் இடம் பெறலாம்.

நாம் என்ன சூழ்நிலையைச் சந்திக்கின்றோமோ அது சம்பந்தமான மன உணர்ச்சிதான் நமக்கு ஏற்படும்.

நாம் எதிர்கொள்ளும் சூழ்நிலைக்கேற்ப மகிழ்ச்சி ஏற்படலாம் அல்லது வருத்தம் ஏற்படலாம். நமக்கு எந்தச் செயலுமே இல்லாத சந்தர்ப்பத்தில் நமக்கு போரடிக்கும் உணர்வு கூட ஏற்படலாம்.

ஆனால் நமது பிரவாகத்தில் எந்த உணர்வுகள் இடம் பெற்றாலும், அவை தோன்றி மறையும் தன்மையுடனேயே உள்ளன.

தோன்றுவது அனைத்தும் நம்மை மீறி நடைபெறுகின்றன.

ஆனால் ஞானப் புரிதல் ஏற்பட்ட அனைவருக்கும், அப்படித் தோன்றிய உணர்ச்சிகள் அனைத்தும் சுழலை ஏற்படுத்தாமல் விரைவில் மறைந்து விடுகின்றன.

**தோன்றிய அனைத்தும் விரைவில் மனதை விட்டு மறைவதையே மன ஆரோக்கியம் என்று கூறுகிறோம்.**

“நான் தியானங்கள் பல செய்வதுண்டு. அதனால் எனக்கு நல்ல அனுபவங்கள் ஏற்பட்டு வந்தன. தற்போதுதான் பிரவாகத்தை மனமுவந்து ஏற்றுக் கொண்டேன். இந்தப் பிரவாகத்தில் ஏற்படும் அனுபவங்கள், எனது தியான அனுபவங்களைப் போல் சுவாரஸ்யமாக இல்லையே? நான் மீண்டும் தியானங்களில் ஈடுபடலாமா?”

– இப்படி ஓர் அன்பர் கேள்வி எழுப்பினார்.

இங்கு நாம் என்ன செய்ய வேண்டும்?

தியானங்களில் ஈடுபட வேண்டுமா?

தியானத்தில் ஈடுபடக் கூடாது என நாம் தியானத்துக்கு என்றுமே தடை விதித்ததில்லை.

தியானத்தையும் ஞானத்தையும் இணைக்க வேண்டாம் என்று தான் கூறியுள்ளேன்.

நாம் நமது மன மகிழ்ச்சிக்காகவும், உடல் பயிற்சியாகவும் காலை, மாலை வாக்கிங் போகிறோம். இது தவறா?

மன மகிழ்ச்சிக்காக நல்ல இசையைக் கேட்கிறோம். இது தவறா?

மகிழ்வூட்டும் சுவையான பழச் சாறுகளை அருந்துகிறோம். இது தவறா?

அவை எவையுமே தவறானவை அல்ல. அவற்றைப் போன்று தியானத்திலும் ஈடுபடலாம். தவறே கிடையாது.

ஆனால் இன்ப நுகர்ச்சிக்கு நாம் அடிமைப் பட்டு விடக் கூடாது.

Addiction என்பது இன்பம் சார்ந்தவை. (துன்பம் சார்ந்த Addiction கூட உண்டு. இங்கு அதைப் பற்றிச் சிந்தித்து நாம் குழம்பிக் கொள்ள வேண்டாம்).

அக்காலத்து ஞானிகள் பெரும்பாலும் தியானத்தில் மூழ்கிக் கிடப்பதையே வாடிக்கையாக வைத்திருந்தனர். ஏனெனில் அவர்கள் பெரும்பாலும் துறவிகளாகவே இருந்தனர்.

ஆனால் இக்கால ஞானிகள் அனைவரும் பல விதமான பொறுப்புகளில் இருக்கிறோம்.

அதனால் தியானத்தில் மூழ்கிக் கிடப்பது நமக்கு முக்கியமில்லை.

பிரவாகம் மட்டுமே நமக்கு முக்கியம். அது இன்பப் பிரவாகமாகத் தான் இருக்க வேண்டுமென்ற கட்டாயம் கிடையாது.





V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880



# கேள்வி? பதில்...

## ஞானம் அடைந்த பிறகு நனவு நிலையும் கனவு நிலையின் தகுதிக்கு வந்துவிடுமா?

**கேள்வி:** ஞானம் அடைந்த பிறகு, துரிய விழிப்பு ஏற்பட்டு விட்டால் நம்முடைய நனவு நிலைக் கூட கனவு நிலையின் தகுதிக்கு வந்துவிடும் என்று கூறுகிறார்கள். துரிய விழிப்பு ஏற்பட்டு விட்டது என்பதை நான் எப்படி உணர்வது? என்னுடைய நனவு நிலை, கனவு நிலையின் தகுதிக்கு வந்துவிட்டது என்பதை எப்படிப் புரிந்து கொள்வது?

**பதில்:** தூக்கம், கனவு, நனவு, துரியம் என்பதைப் பற்றி நாம் தெளிவாக தெரிந்து கொண்டால் துரிய விழிப்பு என்றால் என்ன என்பது புரிந்து விடும்.

தூக்கம் என்பது எந்த நிலையும் இல்லாத நிலை.

தூக்கத்தின் போது ஏற்படும் நினைவு தான் கனவு. கனவு கண்டு கொண்டு இருக்கும் போது கனவில் நடப்பது அனைத்தும் உண்மை போல் தான் தெரியும். தூக்கத்திலிருந்து விழித்த பிறகு தான் நாம் கண்டது கனவு என்பது நமக்கு தெரியும். கனவு காணும் போது அது முழுக்க முழுக்க உண்மையான சம்பவம் போல் தான் நமக்கு தெரியும்.

நனவு என்பது நாம் விழித்திருக்கும் நிலை. இந்த நனவு நிலையில் தான் நாம் நம்முடைய அன்றாட பணிகள் அனைத்தையும் செய்கிறோம்.

துரியம் என்பது நமது மனதின் ஆழ் நிலை. அது தான் ஆசையற்று இயங்கும் மனம் அதுதான் தேடுதலை நிறுத்திக் கொண்ட மனம். நிர்வாண நிலையில் உள்ள மனம். இந்த துரிய நிலையை நாம் முயற்சி செய்து ஒரு போதும் அடைய முடியாது. துரிய நிலை தான் நம்முடைய இயல்பான யதார்த்த நிலை ஆகும்.

கனவு, விழிப்பு என்பதை நாம் எப்படிப் புரிந்து கொள்கிறோமோ அதே அடிப்படையில்தான் நனவு, துரியம் என்பதையும் புரிந்து கொள்ளப் போகிறோம்.

நாம் தூங்கும் போது ஒரு கனவு காண்பதாக வைத்துக் கொள்வோம். அந்த கனவில் ஒரு அடர்ந்த காட்டில் பல மிருகங்களுக்கு நடுவில் நாம் மாட்டிக் கொண்டது போலவும், அவைகள் நம்மை துரத்திக் கொண்டு வருவது போலவும் நமக்கு தெரிகிறது. அந்த மிருகங்கள் நம்மை தாக்குகிறது என்பது தெரிந்த வினாடி நாம் திடுக்கிட்டு விழித்துக் கொள்கிறோம். விழித்தவுடனே “அப்பாடா! இது கனவு தானா” என்று தெரிந்து கொண்ட பிறகு கனவில் ஏற்பட்ட பயத்திலிருந்து விடுபட்டு யதார்த்த நனவு நிலைக்கு வருகிறோம். கனவிலிருந்து விழித்த பிறகு கனவில் ஏற்பட்ட பயத்திலிருந்து மனம் விடுபட்டு நிதானத்திற்கு முதலிலும் பிறகு உடலில் ஏற்பட்ட இரசாயன மாற்றமான வேர்த்தலில் இருந்தும் நெஞ்சு படபடப்புலிருந்தும் விடுபட்டு இயல்பான உடல் நிலைக்கு திரும்புவோம்.

தூக்கத்திலிருந்து விழித்த பிறகு அது கனவு தான் என்பது நமக்கு தெரிந்த பிறகு நாம் அந்த கனவுக்காக பயப்பட வேண்டிய அவசியமோ அதற்காக வருத்தப்படவோ தேவையில்லை. முடிந்த போன கனவு சம்பந்தமாக எந்த வேலையும் இல்லை என்பது நமக்கு புரிந்து விடுகிறது. நாம் நம்முடைய இயல்பான யதார்த்த நிலைக்குத் திரும்பி விடுகிறோம்.

இதே அடிப்படையில் தான் நனவையும் துரிய விழிப்பையும் புரிந்து கொள்ள போகிறோம்.

நனவு நிலையில் நமக்கு ஒரு சம்பவம் நடப்பதாக வைத்துக் கொள்வோம். நமக்கு மிகவும் நெருக்கமானவர் ஏதோ ஒரு சூழ்நிலையில், அவர் இருந்த மன நிலையில் நம்மை மிகவும் மனம் வருத்தப்படும்படி பேசி விடுகிறார். அவர் பேசி விட்டு சென்று விடுகிறார். அவர் சென்ற பிறகும் கூட நாம் அந்த சம்பவம் சம்பந்தமாக மிகவும் மன வேதனை அடைகிறோம். “எப்படி நம்மை, அவர் இப்படி பேசலாம்” என நமக்குள் நாம் போராடுகின்றோம். பிறகு வருத்தப்படுகிறோம். மீண்டும் மீண்டும் போராடி, வருத்தப்பட்டு மிகுந்த மன வேதனை அடைகிறோம். இப்படியே கொஞ்ச நேரம் நீடிக்கிறது பிறது ஒரு கட்டத்தில் நமக்கு தெரிகிறது, நமக்கு ஏற்பட்டுள்ள மனவேதனை சம்பந்தமாக மனதில் நம்மால் எதுவும் செய்ய முடியாது என்ற புரிதல் தாமாக நினைவுக்கு வருகிறது.

நமக்கு புரிதல் நினைவுக்கு வந்த பிறகு நம்முடைய கவனமே இல்லாமல் அந்த சம்பவம் சம்பந்தமாக தாமாக போராடிக் கொண்டிருந்த போராட்டத்திலிருந்து விடுகிறோம். நாம் போராட்டத்திலிருந்து விடுபட்ட பிறகு அந்த சம்பவத்தை பற்றிய பாதிப்பு அப்படியே குறையத் தொடங்கிவிடுகிறது. மனதில் பாரமாக அழுத்திக் கொண்டு இருந்த மன வேதனை அப்படியே பாரத்தை கீழே இறக்கி வைத்த ஒரு நிலைக்கு நாம் வந்து விடுகிறோம்.

நம்முடைய கவனத்திற்கு புரிதல் வராமல் அந்த சம்பவம் சம்பந்தமாக போராடி, வருத்தப்பட்டுக் கொண்டு கூட இருந்திருக்கலாம். நம்முடைய கவனத்திற்கு புரிதல் தெரியாதவரை நடக்கும் எந்த நிகழ்வுக்கும் நாம் பொறுப்பு எடுத்துக் கொள்ள தேவையில்லை. நம்முடைய மனதின் கவனத்திற்கு வந்த பிறகு மேற்கொண்டு அந்த சம்பவம் சம்பந்தமாக நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதையும் நாம் அந்த சம்பவத்தை சரி செய்யவோ, மாற்றி அமைக்கவோ, என எந்த வேலையும் நமக்கு இல்லை என்ற புரிதலுக்கு வந்து விடுகிறோம்.

அதுவரை “எதையோ சரிசெய்ய வேண்டும். சீர் அமைக்க வேண்டும்,” என்று போராடிக் கொண்டு இருந்த

மனம் அந்த போராட்டத்திலிருந்து முற்றிலுமாக விடுபட்டு தன்னுடைய இயல்பான நிலையான துரிய நிலைக்கு வந்து விடுகிறது. துரியம் என்பது நம்முடைய இயல்பான யதார்த்தநிலை. எதையும் பற்றி பிடிக்காத, இப்படி தான் நடக்க வேண்டும்; இப்படி நடக்கக் கூடாது என்ற எந்த முயற்சியும் இல்லாத நிர்வாண நிலை. இது தான் துரியம். இது தான் நம்முடைய இயல்பான நிலை.

நனவு நிலையில் நமக்கு ஏதோ ஒரு சம்பவத்தால் மனப் போராட்டம் ஏற்பட்டது. புரிதல் ஏற்பட்ட பிறகு அந்த சம்பவம் சம்பந்தமாக ஏற்பட்ட மன வேதனைக்கு நாம் எதுவும் செய்ய முடியாது என்பதை புரிந்து கொண்ட வினாடி போராட்டத்தில் இயங்கிய நமது மனம் போராட்டத்திலிருந்து விடு பட்டு நம்முடைய இயல்பான மனநிலையான எதையும் பற்றி பிடிக்காத துரிய நிலைக்கு வந்துவிடுகிறது.

பொதுவாக நாம் எப்போதும் இருப்பது நம்முடைய யதார்த்த நிலையான துரியத்தில் தான். அந்த துரிய நிலையில் தான் எல்லாவிதமான எண்ண, உணர்வுகளும் தோன்றி மறைகிறது. எல்லாம் தோன்றுவதற்கு ஆதாரமாக இருக்கும் நம்முடைய துரிய நிலையில் நாம் எந்த மாற்றமும் செய்யத் தேவையில்லை. நம்மால் எந்த மாற்றமும் செய்ய முடியாது.

நம்முடைய யதார்த்த துரிய நிலையில் ஏற்பட்ட தற்காலிக மாற்றமான எண்ண, உணர்வுகளை பற்றி பிடித்துக் கொண்டிருந்த நம் புரிதல் ஏற்பட்ட பிறகு நம்முடைய யதார்த்த துரிய நிலைக்கு திரும்புவோம். நாம் துரிய நிலைக்கு திரும்புவதற்கு எந்த முயற்சியும் செய்யத் தேவையில்லை மாறாக மனதை சரி செய்வதற்கு நாம் செய்து கொண்டு இருக்கிற முயற்சியிலிருந்து விடுபட்டால் மட்டும் போதும். நாம் இருப்பதே துரிய நிலையில் தான். எண்ண உணர்வுகள் நம்மை பற்றிப் பிடிக்கவில்லை. நாம் தான் எண்ண, உணர்வுகளை பற்றிப் பிடித்துக் கொண்டு போராடி பிறகு புரிந்து கொண்டு துரிய நிலைக்கு திரும்புகிறோம்.

ஓர் உதாரணமாக கடல் மற்றும் அலைகளின் இயக்கத்தை பார்ப்போம். கடலின் மொத்த இயக்கத்தோடு பார்க்கும் போது அலைகளின் இயக்கம் மிகச் சிறிய பகுதியே. கடலிருந்து அலைகள் ஏற்பட்டு மீண்டும் கடலில் தான் மறைகிறது. கடலின் ஒரு பகுதியே எழுச்சி அடைந்து அலையாக தோன்றி மீண்டும் கடலாக மாறிவிடுகிறது.

இங்கு கடல் என்பது நம்முடைய யதார்த்த துரியநிலை ஆகும். எண்ணம், உணர்வுகள் என்பது அலைகள் ஆகும். நமது துரியநிலை என்னும் கடலில் ஏற்படும் தற்காலிக அலைகளின் சலனமே எண்ணம் மற்றும் உணர்வுகள் ஆகும்.

நாம் தூங்கும் போது நமது மனதில் ஏற்படும் சிந்தனைதான் கனவாக தோன்றிக் கொண்டிருக்கிறது. அப்போதும் நமது உடல், புலன்கள் ஓய்வு நிலையில் தூக்கத்தில் தான் இருக்கும். இப்படி உடல் தூக்கத்தில் இருக்கும் போதும் கனவினால் ஏற்படும் இரசாயன மாற்றம் தூக்கத்தை கலைக்காத அளவில் குறைவாகவே இருக்கும்.

நாம் நனவு நிலையில் ஒரு பிரச்சினையை சந்திக்கும்போது உடல், புலன்கள் அனைத்தும் இயக்கத்தில் இருக்கும். அப்போது நாம் சந்திக்கும் பிரச்சினைப் பற்றிய எண்ணங்கள் அதனை தொடர்ந்து சிந்திக்கும் சிந்தனைகள் நம் உடலில் இரசாயன மாற்றத்தை ஏற்படுத்தும். நமக்கு புரிதல் ஏற்பட்ட பிறகு நாம் நம்முடைய யதார்த்த துரிய நிலைக்கு வந்து விடுவோம். அப்போது தேவையற்ற சிந்தனையிலிருந்தும் அதனை தொடர்ந்து உடலில் தேவையற்ற இரசாயன மாற்றத்திலிருந்தும் விடுபட்டு எண்ணங்கள் சுதந்திரமாக இயங்கும் கனவு நிலையின் தகுதிக்கு வந்துவிடுகிறோம்.

இப்படி புரிதலினால் நமது மனம் தாமாக மாற்றமடைந்து துரியநிலைக்கு திரும்பிவிடும். நனவு நிலையில் ஏற்பட்ட இரசாயன மாற்றமும் அதனால் ஏற்பட்ட மன அழுத்தமும் தூக்கத்தை கலைக்காத கனவு நிலையில் ஏற்படுகின்ற இரசாயன மாற்றத்தின் அளவிற்கு குறைந்து, மன அழுத்தத்திலிருந்து விடுபடுகிறது.

இப்படி மாற்றம் அடைவதைதான் நனவு நிலையும் கனவு நிலையின் தகுதிக்கு வந்து விடும் என்று கூறுகிறார்கள்.

**“விடுதலை அடைந்தவனுக்கு நனவும் கனவே.”**

# ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் பவனின் செயல்பாடுகள் மிகச் சிறப்பாக நடை பெற்று வருகிறது. ஐயாவை சந்தித்து உரையாடி தெளிவு பெற பலரும் வந்த வண்ணம் உள்ளனர். வருபவர்கள் தங்குவதற்கான வசதியும் அவர்களுக்கான உணவும் சிறந்த முறையில் ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. மேலும் ஒவ்வொரு மாதமும் ஞான முகாம் கட்டணமின்றி இலவசமாக நடத்த திட்டமிட்டுள்ளோம். ஸ்ரீபகவத் மிஷனுக்கு வரும் நன்கொடைகளையும் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களின் பங்களிப்பையும் கொண்டு மட்டுமே அனைத்து செலவுகளையும் எதிர் கொண்டு வருகிறோம். அந்த வகையில் ரூபாய். 25,000/- நன்கொடை வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனராக இணைந்து கொண்ட நமது அன்பர் திருமதி. **V.ஜமுனா,** தி.நகர். சென்னை அவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

பகவத் ஐயாவின் கருத்துகளை புரிந்து கொண்டவர்களும் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாக இணைந்து ஸ்ரீபகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இப்படிக்கு
ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.

# பாதையில் மலர்ந்த மலர்கள்

## "அர்ச்சனை மலரானேன் ஐயா! உன் பதம் தன்னில்"

ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞானப் புரிதலில் நன்கு தெளிவு பெற்ற தம்பதியினர் மூத்த கர்நாட்டிக் இசைக் கலைஞர் மதுரை திரு. V.S.**மணி** ஐயர் – திருமதி. A.**லலிதா அம்மையார்** ஆவார்கள்.

திருமதி. A.**லலிதா அம்மையார்** அவர்கள் சென்ற மாதம் இயற்கை எய்தினார்.

திருமதி. A.**லலிதா அம்மையார்** அவர்கள் தன் ஞானத் தெளிவுக்கு பிறகு தனக்கு ஞானத்தை வழங்கிய குரு ஸ்ரீ பகவத் ஐயாவை இறைவனாகவே பாவித்து மனமுருகி அவர் இயற்றிய இறுதிக் கவி...

"இறைவா எந்தன் குருவாய் வந்தாய்– ஒரு
நிறைவான நிலை நீ தந்தாய்!
உந்தன் சரணம் கொண்டேன்!
உண்மை மார்க்கம் கண்டேன்!!
எந்தன் மனதில் ஓர் மாற்றம் கண்டேன்!!! (–)

எந்தன் மனதின் இருள் நீக்கியே
அங்கு தெளிவென்னும் ஒளி ஏற்றினாய்...
இந்த மனதின் சக்தி – என் ஜீவன் முக்தி.
இதுவே தெளிவான மனதின் சித்தி – இனி
என்றும் உன் கருணை வெள்ளம்
பரவெளியோடு சேர்த்தாட்கொள்ளும்
உந்தன் சரணம் கொண்டேன்!
உண்மை மார்க்கம் கண்டேன்!!
பிறவித் துயர் தீர்க்கும் திறன் நீ தந்தாய்!! (–)

இந்த மனதின் இயக்கம் தன்னை மாற்றும்
சிறந்த நல்வழி காட்டினாய்.
இந்த நான் என்பதும் அநுபவம் என்பதும்
என்றும் நிலையற்ற ஒன்றல்லவா!

இந்த நிலையற்ற ஒன்றை நம்பி
என் மனதோடு முரனாய் நின்றேன்.
எந்தன் அறியாமையை அகற்றும் ஆசான் நியே!
என்றும் எனக்குந்தன் அருள் வேண்டினேன்!

அர்ச்னை மலரானேன்
ஐயா! உன் பதம் தன்னில்..
கற்பனைகள் கடந்தே அறியும் அறிவாய்
நிற்பதற்கே வழி கற்பிக்கும் உன் பதத்தில் (–)

படிப்பறிவில்லாத பாமரரும் அந்த
பரத்தில் கலந்துய்ய பாதை வகுத்தவரே...
உடல் நீ அல்ல அதில் உறையும் இறை நீ என்னும்
உண்மைதனை உரைக்கும் உத்தமா!
உன் பதத்தில்...
அர்ச்னை மலரானேன்
ஐயா! உன் பதம் தன்னில்..

இறையுடன்...
திருமதி. A.**லலிதா அம்மையார்**



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
மூத்த கர்நாட்டிக் இசைக் கலைஞர் மதுரை திரு. V.S.**மணி** ஐயர் – திருமதி. A.**லலிதா அம்மையார்** தம்பதியினர்.



K.S. ஜீவமணி
செல் : 97891-65555



# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

நமது அகம் அடைவிடத்தை தேடாத பயணமே ஆரோக்கியமான பயணம். அகத்தில் அடைவிடத்தை தேடுவதே நமது அனைத்து பிரச்சினைகளுக்கும் காரணமாகி விடுகிறது.

ஆன்மிகத்தில் பயிற்சி முயற்சியில் இருப்பவர்கள் பலரும் அகத்தை சீர் அமைக்க வேண்டும் என்று அதற்கான முயற்சிலேயே ஈடுபட்டு வருகிறார்கள். இவர்களுக்கு சாதகமாக பல கருத்துகளும் இருந்து வருகிறது.

"எண்ணம்போல் வாழ்வு; மனம் அது செம்மையானால் மந்திரம் செபிக்க தேவையில்லை; எண்ணம் வலிமை மிக்கது; எனவே நல்லவற்றை எண்ண வேண்டும்." என்று இவற்றுக்காக போராடுகிறார்கள்.

மேலும் திருவள்ளுவர் தனது குறளில்...

**மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்**
**ஆகுல நீர பிற** -குறள் 34

மனம் மாசு அற்று இருப்பதே அறம். மற்றவை ஆரவாரத்தை தவிர அறம் அல்ல என்றும்,

**உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன் பொருளைக்**
**கள்ளதால் கள்வேம் எனல்** -குறள் 282

பிறர் பொருளை திருடுவோம் என்று குற்றமானதை மனத்தால் நினைப்பது கூட தீமையானது என்று குறப்பிடுகிறார்.

இவைகளை படிப்பவர்கள் தவறுதலாக புரிந்து கொண்டு 'மனம் ஒரு நல்ல நிலையை அடைய வேண்டும். மனதை உயர்த்த வேண்டும், தூய்மை அடையச் செய்ய வேண்டும். எப்போதும் அமைதியும் ஆனந்தமும் மட்டுமே குடி கொள்ள வேணடும்' என மனதை சீரமைக்கும் முயற்சியில் இறங்குவார்கள். இந்த முயற்சி போராட்டத்தை கொடுக்குமே தவிர என்றும் முடிவுக்கு வராது.

அப்படி என்றால் மகான்கள் கூறிய வார்த்தை தவறானவையா? திருக்குறள் தவறான செய்தியை கொடுக்கின்றதா?

இல்லை, இவை அனைத்தும் உண்மை, சரியானவை அதைப் படித்து முயற்சி செய்து கொண்டிருப்பவர்கள் தாம் தவறாக புரிந்து கொண்டிருக்கிறார்கள். இதில் உள்ள உண்மையை அவர்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை.

மனம் இயற்கையிலேயே எவ்வாறு இயங்குகிறது என்ற உண்மையைப் புரிந்து கொண்டால் இதில் உள்ள உண்மையைப் புரிந்து கொள்ளலாம். மனம் தனக்குள் பதிந்த எத்தனையோ பதிவுகளை சிந்தனையாக வெளிப்படுத்துகிறது. இது தாமாக இயங்குகிறது. வெளிப் பட்ட சிந்தனையின் தொடர்ச்சியாக அந்த சிந்தனையின் மீது ஏறி நாமாகவும் சிந்திக்கின்றோம். இதனை 'சிந்தித்தல்' என்று குறிப்பிடுகிறோம். 'சிந்தனை' என்பது தாமாக நிகழ்வது. 'சிந்தித்தல்' என்பது நாமாக சிந்திப்பது.

இங்கு திருக்குறளில் வள்ளுவர் குறிப்பிடுவது நாமாக சிந்திக்கும் சிந்தித்தலையே ஆகும்.

தாமாக தோன்றும் சிந்தனை வலிமையற்றது. அவை தோன்றிய கணமே மறைந்துவிடும். நாமாக சிந்திக்கும் சிந்தித்தலே வலிமையானது. இந்த சிந்தித்தலே நமது செயலுக்கும் காரணமாக அமைகிறது. நமக்கு தோன்றும் சிந்தனை நம் கைவசம் இல்லை. அவை இயற்கையானவை. அவைகளில் நல்லவை, கெட்டவை என்று எதுவும் இல்லை. ஆனால் நாமாக சிந்திக்கும் சிந்தித்தல் நல்லவையாக இருக்க வேண்டும். குற்றமான செயலை எவ்வாறு செய்யலாம் என மனதால் நாமாக சிந்திப்பது கூட தீமையானது. இதைத்தான் வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

மனத்தில் தாமாக தோன்றும் எண்ணமோ உணர்வோ எது வேண்டுமானாலும் இருக்கலாம், எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். அவை வான வேடிக்கை வெடித்து மறைவது போல தோன்றி மறைந்து கொண்டே இருக்கிறது. கணந்தோறும் ஓடும் ஆறு போல ஓடி மறைந்து கொண்டு தூய்மையாகவே மாசற்று இயங்கி கொண்டிருக்கிறது. அவற்றை சீர் அமைக்க முயற்சி செய்வதால் மட்டுமே மனம் மாசு அடைகிறது. மனத்தின் இயக்கத்தை புரிந்து கொண்ட நிலையில், அகப்போராட்டத்தை கைவிட்ட நிலையில், மனம் தாமாகவே மாசற்ற நிலையில் இயங்குகிறது. இதுவே அறம்.

**மனத்தில் தாமாக தோன்றும் சிந்தனை – அகம்**
**நாமாக சிந்திகும் சிந்தித்தல் – புறம்.**

இவ்விரண்டையும் பிரித்து அறியும் புரிதலை கொடுத்தவர் நமது பகவத் ஐயா அவர்கள்.

இந்த உண்மையைப் பல கோணங்களில் விளக்கி ஞானம் முகாம்களில் ஞானத்தை வழங்கி வருகிறார் ஸ்ரீபகவத் ஐயா அவர்கள். அந்த வகையில் ஜுலை மாதம் 8 மற்றும் 9ஆம் தேதிகளில் ஸ்ரீபகவத் பவனில் 2நாள் ஞான முகாம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. ஏப்ரல் மாதம் நடைபெற்ற ஏற்காடு ஞானமுகாமில் பங்கேற்ற ஸ்ரீபகவத் பவன் நிறுவனர் வேலூர். திரு.Hr.குமார் அவர்கள்,

ஞானமுகாமின் சிறப்பை உணர்ந்து தேடுதல் கொண்ட பல அன்பர்களை இந்த ஞான முகாமிற்கு அனுப்பி வைத்திருந்தார்.

மேலும் புதிய அன்பர்கள் பலர் ஐயாவின் உரையை Youtube வழியாகவும் கேட்டு இந்த ஞான முகாமில் கலந்து கொண்டனர். இதில் கலந்து கொண்ட அனைவரும் மன நிறைவுடனும் தெளிவுடனும் சென்றனர். இதனை தொடர்ந்து செப்டம்பர் மற்றும் அக்டோபர் மாதங்களில் இரண்டு ஞானமுகாம் நடைபெற உள்ளன. இதன் விபரம் இந்த இதழில் கொடுக்கப்பட்டுள்ளன. ஸ்ரீபகவத் ஐயா அவர்களால் எளிய புரிதலாக கொடுக்கப்படும் ஞானம் நமது வாழ்க்கை பயணத்தையே சரியான கோணத்திற்கு திருப்பி விட்டு விடுகிறது. பயனடைந்தவர்கள் புதியவர்கள் பலருக்கும் இதனை அறிமுகம் செய்து அவர்களையும் பயனடையச் செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

# ஸ்ரீ பகவத் பவன் – புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்,

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும் கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் **புரவலர்** குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ.1000 முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ.12000 முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று புரவலர்களாக இணைந்தவர்கள் :

1. திரு. **சரவணன்,** புரசைவாக்கம், சென்னை.
2. திரு. **வீரன்சுப்பு (எ) இராஜேஸ்,** புதுக்கோட்டை.
3. திரு. **கணேஷ்,** கோவை.
4. திருமதி. **முத்துலட்சுமி சரவணன்,** சென்னை,
5. திரு. **இரகு,** கிருஷ்ணகிரி.
6. திரு. அஃகு ஹீலர். **உமர் ஃபாரூக்,** கம்பம்.
7. திரு. **சேகர்,** கத்தார்.
8. திரு. **குணாலன்,** கோவை .
9. திரு. **சம்பத்,** சென்னை.
10. திரு. **வெங்கட்ராமன்,** சென்னை.
11. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
12. திரு. **பாலசுப்ரமணி,** பரமத்தி வேலூர்.
13. திரு. **பாரதிராஜா,** பரமத்தி வேலூர்.
14. திரு. **பாபுலால்,** பெங்களூர்.
15. திரு. **முரளி,** சென்னை.
16. திரு. **வீரப்பன்,** நெல்லை.
17. திரு. **அருணாச்சலம்,** நெல்லை.
18. திருமதி. **நிருபமா ஸ்ரீநாத்,** சென்னை.
19. திருமதி. **வடிவம்மாள்,** சென்னை.
20. திரு. ஹீலர். **சுரேஷ்,** சென்னை.
21. திரு. **ஹரி கிருஷ்ணன்,** சென்னை.
22. திரு. **இரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பலம், சென்னை.
23. திரு. **பாலமுருகன்,** USA.
24. திருமதி. **சுரபி,** டெல்லி.
25. திரு. **முருகவேல்** சென்னை.
26. திரு. **ஸ்ரீபகவத்மிஷன்,**வெஸ்ட்மாம்பலம் சத்சங்கம்.
27. திரு. **கார்த்திக்,** போரூர், சென்னை.
28. திரு. **ஆனந்த் V.ராயன்,** திருச்செந்தூர்.
29. திரு. **யுகேஷ்குமார்,** சென்னை.
30. திரு. **P.சௌந்தரராஜன்** சென்னை.
31. திரு. **D.சந்திரசேகர்,** சென்னை.
32. திரு. **நத்தகோபால் நாராயணன்,** USA.
33. திரு. **பாபு,** காட்பாடி, வேலூர்.
34. திரு. **K.முருகானந்தன்,** திருப்பூர்.
35. திரு. **P.R. குமார்,** எர்ணாகுளம்.
36. திருமதி. **மாலா மங்களேஸ்வரன்,** லண்டன்.
37. திரு. **செந்தில் ஜெயபாலன்,** பெங்களூரு.
38. திரு. **Javis Arul Jerald Arul Samy, Dubai.**

புரவலர்களாக தங்களை இணைத்துக் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம். வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590 Car Street Branch, Salem.** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

## நிகழ்ச்சி நிழல்கள்



ஸ்ரீ பகவத் ஐயாவுடன் ஜூலை ஞான முகாமில் கலந்து கொண்ட அன்பர்கள்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
நந்தகுமார் நாராயணன் USA



சிந்தனையும் சிந்திப்பும் நூலை ஐயா
வழங்க சண்முகவேல் பெற்றுக் கொண்டார்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
துபாய் ஜேவிஸ் அருள்ஜெரால்டு அவர்கள்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
வேலுச்சாமி தம்பதியினர்



ஸ்ரீ பகவத் ஐயாவுடன் மலேசியா
பெருமாள்சாமி அவர்கள்



ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன்
மலேசியா தேவி மற்றும் சாந்தி அவர்கள்



# ஜென் கதை

## விடைகாண முடியாத கேள்வி

சாரிபுட்டர் என்ற பெரிய அறிவாளி வேதங்கள் உபநிடதங்களையெல்லாம் நன்கு கற்றவர். அந்தக் காலத்தின் புகழ்பெற்ற அறிஞராகவும் சிந்தனையாளராகவும் திகழ்ந்தவர்.

அவர் ஒருநாள் புத்தர் பெருமானைக் காண வந்தார்.

சும்மா காண வரவில்லை. ஞானம் பெறவே வந்தார்.

“இறுதியாக நீ வந்து விட்டாயா? நல்லது. சில காலம் என்னுடன் இங்கே இரு. நீ பெரிய அறிவாளி, நிறைய கற்றவன். உனக்கு கற்றுத்தர என்னிடம் எந்தக் கோட்பாடுகளும் இல்லை. உபதேசிக்க எந்த அறிவுரைகளும் இல்லை. நீ ஒன்றும் செய்ய வேண்டாம், சும்மா என்னுடன் கொஞ்ச காலம் இரு.” என்றார் புத்தர்.

சாரிபுட்டருக்கு வியப்பாக இருந்தது. 'மெய் ஞானம் பெற வந்தால் இவர் சும்மா இரு என்கிறாரே! விளக்கங்கள் பெறலாமென்றால் சில காலம் சும்மா அவருடன் இருக்க சொல்கிறாரே!' என்று நினைத்தார். என்றாலும் புத்தர் சொன்னதை ஏற்று கொஞ்ச காலம் அவருடன் மௌனமாக இருக்க ஆரம்பித்தார்.

சில காலம் கழித்து, மௌலிங்க பட்டர் என்ற அறிஞர் அங்கே வந்தார். அவரும் சாரிபுட்டரைப் போல மெய்ஞ்ஞானம் பெற வந்தவர்தான்.

அவரிடமும் புத்தர் பெருமான் முன்பு போலவே தான் சொன்னார்.

“சில காலம் என்னுடன் சும்மா இரு. அலைபாயும் உன் மனம் முதலில் அமைதியடையட்டும். தற்போது உனது கேள்விகள் அப்படியே இருக்கட்டும். சில காலத்திற்கு பிறகு ஏதாவது கேட்க விரும்பினால் நீ கேட்கலாம். கொஞ்ச காலத்திற்கு எந்த கேள்விகளும் கேட்காமல் என்னுடன் சும்மா இரு.” என்றார் புத்தர்.

மௌலிங்க பட்டரும் சம்மதம் தெரிவித்து விட்டு சில காலம் புத்தருடன் தங்கிவிட முடிவெடுத்தார்.

சாரிபுட்டர் பக்கத்தில் தான் இருந்தார். அவர் அதைக் கண்டு கலகலவெனச் சிரித்தார்!

மௌலிங்கப்பட்டர் திகைப்படைந்து, “ஏன் சிரித்தீர்கள்?” என்று கேட்டார்.

“புத்தர் பெருமான் உங்களை ஏமாற்றப் பார்க்கிறார்! நீங்களும் ஏமாந்து விட்டீர்கள்! ஏதாவது கேட்க வேண்டியிருந்தால் இப்போதே கேட்டு விடுங்கள் சில காலம் மௌனத்திற்கு பின் உங்கள் மனதில் இப்போது எழுந்துள்ள வினாக்கள் மறைந்து விடும். எனக்கும் அப்படித்தான் நேர்ந்துவிட்டது. சில காலம் இவருடன் மௌனமாக இருக்கும்போது அது, விவாதங்களையும் ஐயங்களையெல்லாம் அழித்துவிடும். அப்புறம் கேட்பதற்கு ஒன்றுமே இராது. இது புத்தரின் தந்திரம்! அதனால், கேட்க நினைத்ததை இப்போதே கேட்டு விடுவது நல்லது. அப்புறம் கேட்பதற்கு எதுவுமே இராது” என்றார் சாரிபுட்டர்.

ஆனால் புத்தர் என்னவோ தம் வாக்குறுதியில் உறுதியாகத்தான் இருந்தார்.

“நான் நிச்சயமாக உன் வினாக்களுக்கு விடையளிப்பேன். சந்தேகமே வேண்டாம். சில காலம் காத்திரு!” என்றார்.

மௌலிங்க பட்டர் ஏற்றுக்கொண்டார்.

காலங்கள் ஓடி மறைந்தது.

மௌலிங்க பட்டர் அதை மறந்தே போனார்.

ஆனால் புத்தர் பெருமான் மறக்கவில்லை.

சிலகாலம் கழித்து “மௌலிங்கபட்டா! நீ உன் ஐயங்களை இனிக் கேட்கலாம்” என்றார் புத்தர்.

மௌலிங்க பட்டர் எழுந்து மௌனமாக நின்றார்.

“கேட்பதற்கு எதுவும் இல்லை பெருமானே” என்று கூறிவிட்டு தனது வழக்கமாக பணியைத் தொடர்ந்தார்.

“எல்லாக் கேள்விகளுக்கும் விடைகாண முடியாது என்ற மனதின் இயலாமையைப் புரிந்து கொண்டு தேடுதல் அற்று சும்மா இருப்பதே ஞானம்.” என்பதை தனக்குள் உணர்ந்து கொண்டார்.

**எல்லா கேள்விகளுக்கும் பதில் தேடுவதை விட கேள்விகள் இல்லாமல் போவதே சிறப்பு.**

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555